*Āryatarmam*
*Puttakam 14,*
*sañcikai 26 [i.e. 25]*
*Cukla, Āṭi 03*
*[July 18, 1929]*

Record no. 287

ஸ்ரீ திரிபுரசுந்தரீஸமேத ஸ்ரீ சந்திரமௌளீசுவராய நம:

# ஆர்ய தர்மம்.

அனேகம் பிரஜைகளைப்பெற்றவளுக்கு மலடி மருத்துவம் செய்வதுபோலும், அரோக திடகாத்திரமுள்ளவனுக்கு நித்திய நோயாளி ஆரோக்கியோபதேசம் செய்வதுபோலும், ஆஸ்திக சிரோமணிக்கு நாஸ்திகன் தர்மோபதேசம் செய்வதுபோலும், அநாதி பரம்பரையாக ஆர்ய சாஸ்திரங்களை நம்பி ஆர்யாசார இரஹஸ்யத்தை நன்குணர்ந்த வைதிக குலத்துதித்தோருக்கு அநார்யர்களும், அதர்மிஷ்டர்களும் தர்மோபதேசம் செய்யத்தலைப்பட்டிருக்கிறார்கள். அதாவது வைதிகர் வேதவாக்கியம்தான் தர்ம்மப்பிரமாணமென்றால் - சுருதியைப் பிரமாணமாக நம்பித்தாங்கள் கெட்டது போதாதென்று பிறரையும் கெடுக்கப்பார்க்கிறாரிவரென்று வைதிகரைத் தூஷிக்கிறார் அவைதிகர். தர்மஸ்வரூபமெக்காலு மொரேவிதமாயுள்ளதென்கிறார் வைதிகர். காலத்திற்கேற்றபடி கற்பித்துக்கொள்ளுவதே தர்மமாகையால் அது நிலைத்ததோர் ஸ்ரூபமுடையதல்லவென்கிறார் அவைதிகர். இவ்வாறு தர்மத்தையனுஷ்டிக்குமதிகாரி, அதன் பிரயோஜனம் முதலியவைகளில், ஒருவர் சொல்லுகிறபடி மற்றொருவர் சொல்லுவதில்லை. இப்படியிருக்கையில் இயற்கையாய் வேதப்பிராமாண்யத்தைத் தெரிந்துகொண்டவர்களுக்கு தர்மஸ்வரூபம், முதலியவிஷயங்களில் ஸம்சயமுண்டாகமாட்டாது. பிறர் நம்புவதில் நம்பிக்கைவைக்கும் ஸ்வபாவமுள்ளவர்களான அஸ்வதந்திர புத்தியுள்ளவர்களுக்கோவெனில் தர்மஸ்வரூபாதிகளில் ஸந்தேஹமுண்டாவது ஸஹஜமாயிருக்கிறது. உதாரணமாக பாலிகா விவாஹம் தர்மமென்று ஸர்வசுருதி வசனங்களும் ஒரேதாத்பரியத்துடன் போதித்தபோதிலும், வேதத்தையே நம்பாதவர்களும், நம்புவதாக வேஷம்பூண்டு வேதவாக்கியங்களுக்கு நியாயவிபரீதவழியில் தாறுமாறாகப்பொருள் கற்பிப்பவர்களும், அதனைமுற்றிலும் அதர்மமென்று பத்திரிகைகளில் பிரசுரித்தும், பிரஸங்கமேடைகளில் பலவாறாகப் பிரஸங்கித்தும், வைதிகர் விபரீதவாதிகள்; தாம் ஒழுங்காய் நடப்பவரென்று போதித்தும் வருகிறபடியாலும், வைதிகர் இதையொன்றையும் காதில் வாங்காமல் "தர்மமே ஜயம்." "ஈசனே ஸாக்ஷி." என்று மௌனம்ஸாதித்து வருவதாலும் ஸாமான்ய ஜனங்களுக்கு இவ்விவாஹ விஷயத்தில் புத்தி, தங்கித்தயங்கித்தடுமாறிக் கிடக்கின்றதல்லவா! அதற்கேற்றபடி வாதக்ஷிணைப் போராட்டமும் அவர்களது மனதைக்கலக்கிவிடுகிறது. அதனால்பெண்ணைப்பெற்றவர்கள் படுந்துயரம் சொல்லமுடியாது. இவ்வாபத்துக்களையெல்லாம் விலக்கி, முன்போலவே தர்மங்களை நிலைநாட்டி, அதன்மூலமாய் ஸர்வப்பிராணிகளும் க்ஷேமத்தையடையும்படி ஸர்வேசுவரனான பரமேசுவரன் அருள் புரிவாராக.

சுபம்.!

ப—ர்.




# பாலிகா விவாஹம்.

பரமதர்மம்.

ஸிருஷ்டியாரம்ப காலத்தில் பிரஜைகளை ஸிருஷ்டிப்பதற்கு ப்ரம்மதேவரும் அவரது புத்திரர்களும் மிகவும் சிரமப்பட்டும் பிரஜா விருத்தியாகமலிருக்கவே, "இவ்வாறு மானஸிகமான ஸிருஷ்டி செய்வதானல் ஒரு பொழுதும் பிரஜா விருத்தியாகப்போவதில்லை அதற்காக இனி ஸ்திரீ புருஷர்கள் சேர்ந்து பிரஜோத்பத்தி செய்ய வேண்டுமென நிச்சயித்து கசியபாதிகள் இஷ்டப்படி பிரஜா விருத்தி செய்துவந்தார்கள். இந்த விஷயம் பாகவதாதிகளில் பிரஸித்தமானது. அதில்—

प्रजनार्थं स्त्रियःसृष्टाः सन्तानार्थं च मानवाः । (மனு-9-96)

"கர்ப்போத்பாதனத்திற்குப் புருஷர்களும், கர்ப்பத்தைத்தரித்து பிரஜையை உண்டுபண்ணுவதற்காக ஸ்திரீகளும் ஸிருஷ்டிக்கப்பட்டார்கள்"

என்று மனுஸ்மிருதியிற் கூறியவாறு அன்றுமுதல் இன்றுவரை பிரஜாவிருத்தி செய்யப்பட்டு வருகின்றது. இதற்கு அனுகூலமாகவே புருஷனுக்கும் ஸ்திரீக்கும் அங்காவயவங்கள் அமைக்கப்பட்டிருக்கின்றன வென்பது நமது பிராசீன வைத்தியநூல்களில் சாரீரஸ்தானத்தின் அங்கவிபாகாத்தியாயத்தில் நன்கு விளக்கிக் காட்டப்பட்டிருக்கின்றது. அவ்வாறாக உண்டாகும் பிரஜைகள் இம்மையில் மட்டும் வேண்டிய காரியங்களுக்கு ஸஹாயமாய் இருப்பதில்லை, ஆனல் லோகாந்தரங்களிலும் உபயோகப்படுகின்றனவாம். இம்மையிலுபகரிப்பதைவிட மறுமையிலுபயோகப்படுவதே அதிகமாம், சிராத்தாதிகளும், தர்ப்பணாதிகளும், புத்திராதிகள் பிதா முதலியோர்களுக்கு உதவிபுரிகின்றார்கள். அதனாற்றான் யாவரும் ஸந்தானத்தையபேக்ஷிக்கின்றார்கள். அதற்கே



தேனும் பிரதிபந்தகதோஷமிருப்பினும் அதற்கு ஜோதிஷசாஸ்திரத்திலும் கர்மவிபாகத்திலும் கூறிய பரிஹாரத்தைச் செய்து கொண்டு ஸந்தானத்தை ஸம்பாதித்துக்கொள்ளுகிறார்கள். எவ்வளவு ஸம்பத்திருப்பினும் இந்தப் புத்திரபாக்யம் பெறாதவனைப் பூர்ணமாயில்லாதவனென்று சுருதி கூறுகின்றது. பிள்ளையென்று பிறந்துவிட்டால் மாத்திரம் போதாது. ஆனல் அவன் அநுஷ்டா(ஸ்தாசாரங்களில் சிக்ஷிக்கப்பட்டவ) னாகவுமிருக்கவேண்டும். அவன்றான் பரலோகத்திற்கு ஹிதமாக இருப்பனும். அவ்விதமாக இம்மையிலும் மறுமையிலுமுதவும்படியான புத்திரரத்னம் பரஸ்பரம் அநுகூலமாயிருக்கின்ற தம்பதிகளுக்குத் தான் கிடைக்கும். அந்த ஸ்திரீ புருஷர்களின் ஆநுகூல்யமும் பால்யம் முதற்கொண்டே அன்னியோன்யப்ரீதியுடையவர்களுக்குத் தான் ஏற்படும். பால்யத்திலேற்பட்ட பழக்கந்தான் தொடர்ந்து நிற்குமென்று பிரஹ்லாத சரித்திரங்களினின்றும் தெரிகின்றது. ஸ்ரீ ருக்குமணீ தேவியும் பால்யத்தில் தனது பிதாவாகிய பீஷ்மகமகாராஜனது மடியில் விளையாடிக்கொண்டிருக்கும்பொழுது மஹாராஜனைக் காணவந்தவர்கள் கூறும் கதைகளைக் கேட்டிருந்தபோது பல பெரியோர்கள் ஸ்ரீகிருஷ்ணபகவானுடைய தைர்ய, காம்பீர்ய, ஔதார்ய, ஸௌந்தர்யாதி குணாதிசயங்களை முதன்மையாகக் கேட்டு அவரிடத்திலேயே காதல் வைத்து அவரையே கணவனாக அடைந்தாளென்று,

सोऽपसृत्य मुकुन्दस्य रूपवीर्यगुणाश्रियः ।
गृहागतैर्गीयमानास्तंमेने सदृशंपतिम् ॥

என்பதாதி சுலோகங்களில் பிரஸித்தமானது.

அஷ்டாங்க ஸங்கிரஹத்திலும்,

जाताश्चैवं रूपवन्तो महासत्वाश्चिरायुषः ।
ऋणान्मोचयितारस्युः सुपुत्राः पुत्रिणां मताः ॥

"இவ்வாறு ஸம்ஸ்காரம் செய்யப்பட்டு அந்நியோன்ய ப்ரீதி வசத்தால் ஜனிப்பார்களேயானல் நல்லரூபம், மேலான மனது, தீர்க்கமான ஆயுஸ் முதலிய நற்குணம் வாய்ந்த நல்ல பிள்ளைகளாயிருப்பதோடு பெற்றோர்களுக்குள்ள தேவ, ரிஷி, பித்ருகடன்களைத்தீர்த்துவைப்பவர்களாயும் ஆவார்கள்" என்று கூறப்பட்டி

ருக்கிறது. இதனுல் பிறந்தபிள்ளை ஸத்புத்திரனுக இருக்கவேண்டும். அப்படி இல்லாவிடில்,

दुरपत्यं कुलं गारो गोत्रजातं महत्यपि ।

பெரிய வம்சத்தில் ஜனித்தவனுயினும், துஷ்டப்பிள்ளையாக இருந்தால் குலத்திற்கே கொள்ளியாவான் என்பதாக விபரீதமாகுமெனக் கூறப்படுகின்றது. ஆகவே, பரலோகத்தில் புத்திரனுலடையவேண்டியபயனை அபேக்ஷித்தவர்கள் அதற்காகவென்றே ஏற்பட்ட விவாஹ ஸம்ஸ்காரத்தில் வதூவரர்களின் வயதை சுருதி ஸூத்திரங்களில் கூறப்பட்டபடி கிரகித்துக்கொள்ளவேண்டும். மந்திரலிங்கத்தில் ப்ரௌடா விவாஹம் ஸூசிக்கப்படுகிறதென சில ரது ப்ராந்தி. அம்மாதிரி லிங்கம் கண்டுபிடிப்பதாஞல் புத்திரவதீ விவாஹமும் சாஸ்திரீயமென்று ஏற்பட்டுவிடுமென முன்னெரு சமயம் கூறியிருக்கிரும். சுருதிவாக்கியங்களுக்கு முன் பின் பாராமல் தோன்றுகின்ற பொருளைக் கற்பிப்பது பிராமாணிகர்களுக்கு ஸம்மதமாயிருக்காது. ஆபத்துக்காக கூறப்பட்டவிடத்தை பிரமாணமாகக் காட்டி, ஆரியச்சிறுவர்களின் மனதை சிலர் கலக்கின்றனர். பொதுவாய்க் கூறியிருப்பதைச் சிலர் பிராம்மணர்களுக்கென கற்பிக்கின்றனர். அதுவும் விசாரிக்குமளவில் பொருத்தமுடையதாகாது. பாலிகாவிவாஹத்தைத் தடுக்கின்றவர் பிராமணஜாதியில் தடுக்க முயலுகின்ருரா? வேறு அன்னிய ஜாதியில் தடுக்க முயலுகின்ருரா? என்று விசாரித்தால் இதர ஜாதியாருக்கு ப்ரௌடாவிவாஹம் நிஷேதிக்கப்படாமையாலும் தற்காலம் நடந்துவருவதை எல்லோரும் ஸம்மதித்திருப்பதாலும் அவர்கள்விஷயத்தில் தடைசெய்யவேண்டியதில்லை. பிராமணஜாதியாருக்கோவெனில், பிரௌடா விவாஹம் பிரத்யக்ஷவசனங்களால் நிஷேதிக்கப்பட்டிருப்பதாலும், விவாஹத்தை விதித்திருக்குமிடமெல்லாம் பாலிகாவிவாஹத்தையே விதித்திருப்பதாலும், பிராமணர்கள் விஷயத்தில் அதைத் தடுப்பது ஜாதி குலாசாரத்துக்கும் மதாசாரத்துக்கும் முற்றிலும் விரோதமானது. தர்மத்திலாசைகொண்டவர்கள் இத்தகைய துராசாரங்களை ஸம்மதிக்கவே மாட்டார்கள். பிராம்மணர்களது கன்னிகைகளின் விவாஹவயதை அவர்களது ஆசார்ய புருஷர்கள் தீர்மானிக்கவேண்டுமேயல்லது மற்றவர்கள் இதில் தலையிடுவது அனுசிதம். சில நிர்ப்பந்தங்களைக் காட்டி பயமுறுத்தினுலும், வேனன், கார்த்தவீர்யார்ஜுனன் முதலியவர்களின் பயமுறுத்தல்போலவே பயனற்றதாகும். வாதகக்ஷிணை நிர்ப்பந்தம் எவ்வளவு ஏற்பட்டபோதிலும் தர்மப் பிரியர்கள் பாலிகாவிவாஹ முறையைத் தடுக்கக் கனவிலும் நினைக்கமாட்டார்கள். வாதகக்ஷின நிர்ப்பந்தம் பிரௌடா விவாஹ முறையைக் கையாண்டால் ஜோதென்பது சிலரது மனோரதமாத்திரம். பாலிகாவிவாகத்துக்குமேல் நூறுபங்கு அதிகமாக ஏற்படுமென எதிர்கால ஸம்பவத்தை ஆலோசிப்பவர்களுக்கு புலப்படாமல் போகாது. பாலிகாவிவாஹத்தில் பிறக்கும் பிள்ளைகள் பலஹீனர்களாக இருப்பதாய்க் கூறுவது தர்மத்தைக் கெடுக்கும் துராலோசனையாலல்லாது வேறல்ல. ஆகவே, பாலிகாவிவாஹத்தடையும், கர்ப்பத்தடையும் இவைகளெல்லாம் தர்மமார்க்கத்துக்கு விரோதமாகையால் பெரிய புத்தி, சக்தி வாய்ந்தவர்கள் போலி தார்மிகர்களின் துர்போதனைக்கிடபடாமல் பரம்பரையாய் நம்முன்னோர்கள் ஆதரித்துவந்த பாலிகா விவாகமுறையையே பரமதர்மமென்று அனுஷ்டித்து சிரேயஸ்ஸையடைவார்களாக.

ப—ர்.





---

# ஸ்ரீ வியாஸ பூஜை.

வியாஸபூஜையென்பது ஸன்னியாஸிகளுக்கு முக்கியமானதோர் தர்மமாகும். ஸன்னியாஸிகளது தர்மத்தில் 'वर्षासुध्रुवशीलस्स्यात्' வர்ஷாகாலத்தில் ஸன்னியாஸிகள் ஒரேஇடத்திலிருக்கவேண்டும் என்று விதிக்கப்பட்டிருக்கிறது. அக்காலத்தில் அவர்களது சாதுர்மாஸ்யஸங்கல்பத்தைக் கவனித்தால் அதற்கு உபபத்தி கூறப்படுவதாகின்றது. அதாவது:—

प्रायेण प्रावृषिप्राणि संकुलं वर्त्म दृश्यते ।
अतस्तेषामहिंसार्थं पक्षावै श्रुतिचोदनात् ॥
वत्स्यामश्चतुरोमासानत्रैवाऽसति बाधके ।

பெரும்பாலும் வர்ஷாகாலத்தில் வழியெல்லாம் பிராணிகளடர்ந்ததாயிருக்கின்றன. அவைகளுக்கு தமது ஸஞ்சாரத்தால் ஹிம்ஸை

நேரிடாமலிருக்க ஒரு பக்ஷத்தை ஒரு மாஸமாக பாவித்துக் கொள்ளலாம் என்று சுருதி கூறியவாறு நான்குமாதங்களாக பாவிக்கப்படும் நான்கு பக்ஷங்கள் (அதாவது இரண்டுமாஸ காலம்) வேறுஇடையூறு இல்லாதபக்ஷத்தில் இவ்விடத்திலேயே வஸிக்க நினைக்கிறேனென்று சாதுர்மாஸ்ய ஸங்கல்பம் செய்ய வேண்டியதாக விதிக்கப்படுகின்றது. ஸன்னியாஸிகள் அவ்வாச்ர மத்தை ஸ்வீகரிக்கும்போது ஸர்வபிராணிகளுக்கும் அபயதானம் செய்ததாகக் கூறப்படுகின்றது. வர்ஷாகாலத்தில் ஆறு, ஏரி, குளங்களிலும் பயிரிடுவதற்காக வயல்களிலும், தண்ணீர் நிறம்பி அங்கு வெடிப்புகளிலும் வயல்களிலும் ஒண்டியிருந்தப் பிராணி களும் கோடைகாலங்களில் ஆங்காங்கு மேய்ந்துகொண்டிருந்த ஆடு, மாடு, முதலிய ஜந்துக்களும் அங்கு இருக்க இடமில்லாமல் மனிதர் ஸஞ்சரிக்கும் வழிகளிலும் ரோட்டுகளிலும் அதிகமாய் ஸஞ்சரிக்கவரும். அவ்வாறு அந்தப்பிராணிகள் ஸஞ்சரிக்குமிடங் களில் மனிதர்களும் ஸஞ்சரிக்கும்பொழுது தெரிந்தும், தெரியா மலும் அந்தப்பிராணிகளுக்கு ஹிம்ஸை நேரிடலாம். அது அபய தானம் செய்த ஸன்னியாஸிகளுக்கு தர்மமாகாது. அதற்காகவே அந்த வர்ஷாகாலத்தில் ஒரே இடத்தில் இருக்கவேண்டியதாக ஸன்னியாஸதர்மத்தில் விதிக்கப்படுகிறது. அன்றியும்,

द्वेरूपे वासुदेवस्य चरश्चाचरमेवच ।
चरं सन्यासिनां रूपं अचरं प्रतिमादिकम् ॥

“பகவானுக்கு சரவடிவமாயும் ஸ்திரவடிவமாயும் இரண்டுரூப முண்டு அவற்றுள் ஸன்னியாஸிகள் சரஸ்வரூபமாம். பிரதிமாதி கள் ஸ்திரஸ்வரூபமாம்” என்று கூறியபடி ஸன்னியாஸிகள் பக வான் வாஸுதேவனுடைய மூர்த்தியாகக் கூறப்படுகின்றது. பகவான் வாஸுதேவனே எட்டு மாஸகாலம் விழித்துக்கொண் டிருந்து ஜகத்தை ரக்ஷிப்பதுபோல் நான்குமாதகாலம் ஆதிசேஷ தல்பத்தில் யோகநித்திரையடைந்து இரக்ஷித்துவருகிறார். சயனை காதசியில் (அதாவது ஆஷாடசுத்த ஏகாதசியில்) சயனிக்க ஆரம் பித்து உத்தானஏகாதசியில் அதாவது (கார்த்திகசுத்த ஏகாதசி யில்) சயனத்தைவிட்டு எழுந்திருக்கிறாரும். அதுபோலவே பக வத்ஸ்வரூபர்களான ஸன்னியாசிகளும். அந்த நான்குமாஸகாலம் ஒரேவிடத்தில் இருக்கவேண்டுமாம்.



ஆனால் நான்குமாதகாலம் ஸன்னியாஸிகள் ஒரேவிடத்தில் இருப்ப தானால் அவர்களை ஆராதிக்கும் கிருஹஸ்தர்களுக்கு சிரமமுண்டா குமோவென கருணைகூர்ந்து ஒரு பக்ஷத்தையே ஒரு மாதமாகப் பாவித்துக்கொள்க என்று விதித்திருப்பதையனுஸரித்து இரண்டு மாதகாலமே ஓரிடத்தில் சாதுர்மாஸ்ய ஸங்கல்பத்திற்காக தங்கி யிருப்பதாக ஆசாரத்திலிருந்துவருகிறது. இது வியாஸபூர்ணிமை எனப்படும். ஆஷாடசுத்தபூர்ணிமையில் துவக்கப்படுகிறது. பாத்ர பதபூர்ணிமையில் இந்த விரதம் பூர்த்திசெய்யப்படுகிறது. வியாஸ பூர்ணிமையன்று பகவான் முதல் அவரவர்களது குருபர்யந்தமா யுள்ள ஆசார்யர்களை அதற்குள்ள விதிப்படி பூஜித்துவருகிறார்கள். ஸர்வ ஆசார்யர்களுக்கும் பூஜைசெய்யப்பட்டாலும் வியாஸபூஜை என்று வழங்கப்படுகிறது. இதில் கிரஹஸ்த தர்மத்திலிருப்ப வர்கள் ஸன்னியாஸிகளைத் தங்கள் கிரமத்துக்கு வரவழைத்து ஸ்ரீ வியாஸபூஜையைச் செய்வித்து சாதுர்மாஸ்ய விரதத்தையும் பூர்த்திசெய்து அந்த காலத்தில் அவர்களை யாதரித்து வந்ததார் களானால் எவ்வளவோ யாகம்செய்த புண்ணியபலன் கிடைக்கிற தென்று கூறியபடி இந்ததர்மத்தைநடத்தி யாவரும் சிரேயஸ்ஸை யடைவார்களாக. சுபம்.

---

# கற்பின் மஹிமை.

( வேதவதியின் சரித்திரம் )

(384-வது பக்கத்தொடர்ச்சி.)

இவையனைத்தையும் வேதவதி கேட்டு மனம் பொறுக்காமல் கோபம் மேலிட்டு அடே இராக்கதப்பதரே பத்துத்தலைப்பூச்சியே கெட்டபுத்தியுடைய மூர்க்கனே உன் பிரபாவத்தையெல்லாம் என்னிடமா சொல்லவேண்டும்? நான் எல்லாம் அறிவேன், நீ கைலாசபர்வதத்தின்கீழகப்பட்டுபல்லைக்காட்டிகெஞ்சி சாமகானம் செய்து (நாரதர் உதவியால்) ஈசனை திருப்திசெய்து நீ பிழைத்து வந்ததையும், வாலியின் வாலில் நீ கட்டுண்டு அவன் குமாரனை அங்கதன் தொட்டிலின்மேல் விளையாட்டுபொம்மையாக உன்னை வாலி கட்டிவைத்திருந்ததையும், கார்த்தவீர்யார்ச்சுனனுடன் யுத் தத்துக்குப்போய் அவன் உன்னை ஜயிலில் அடைத்திருந்தபோது

ஜயில் சோறுபோடும் தாதிகள் 'பத்துதலை ராவணு நீ கூத்தாடினுல் தான் சோறுபோடுவே'னென்று சொல்ல அதற்கு நீ கூத்தாடி சாப்பிட்டதையும் நான் அறிவேன் உன் விஷயம் எல்லாம் எனக்குத் தெரிந்ததே. ஆகையால் வீணே என்னிடம் அபராதியாகி கெட்டுப்போகாதே. நானே உத்தமி, பதிவ்ருதை; நான் ஒரு வார்த்தை சொன்னுல், அது பலித்தே தீரும். ஆகையால் கிட்டே நெருங்காதே, அக்னியைக் கண்ட புழுப்போல் ஓடிவிடு, வீணுய் நீகெட்டதுமல்லாமல் உன் வம்சத்தையும் கெடுத்துக்கொள்ளாதே. நீ அந்த விஷ்ணுவுக்கு ஒருநாளும் சமத்வமாகமாட்டாய். ஊர்க்குருவி கருடனுக்கு சமனுகுமா? நீ ஒருநாளும் அந்த பரந்தாமனை மகாவிஷ்ணுவுக்கு சமமாகமாட்டாய்; கிட்ட நில்லாதே ஓடிப்போய்விடு என்று சொன்னுள், சொன்னதும் கோபம் தாளாமல் ஆலகால விஷத்தைப்போல் சீறி அதிக்கிரமித்து அக்கற்புடைய கன்னிகையின் கூந்தலைப்பற்றி இழுக்கநினைத்தான். அதையறிந்து வேதவதி கோபங்கொண்டு, உடனே அடா துன்மார்க்கப் பதரே அடாதுசெய்து படாதுபடும் குலத்திலுதித்தவனே! உன்கெட்ட காலத்தினுல் துற்புத்திகொண்டாய் இரும்புத்தூணை செல்லரிக்காதென்பதை அறியவில்லை. அக்கினிபோல் செழித்திருக்கிற என் கூந்தலை நீ தீண்டவந்தமையால் அதை நான் இனி வைத்திருக்கக்கூடாதென்று அதை வாளினுல் அறுத்து அக்கினியில் போடுகிறேன். நானும் அக்கினியில் பிரவேசிக்கிறேன், நீ என் விஷயத்திலபாதம்செய்தமையால் நான்பூலோகத்தில் சீதையாகப்பிறந்து ஸ்ரீமந்நாராயணனை மணந்து உன்னுடைய வம்சத்தை வேறறக்களைந்து நாசமாக்குகிறேன், இது சத்தியம் பதிவிருதைகளுக்கு ஒருநாளும் குறைவில்லை. அவர்கள் இஷ்டமெல்லாம் நிறைவேறும் ஈசனும் அவர்கள் பால்தானிருப்பார் என்று சொல்லி அக்கினியில் பிரவேசித்தாள். இராவணனும் சாபத்தைப் பெற்றுக்கொண்டு இலங்கைக்குப்போய் சேர்ந்து கெட்டகாலத்துக்குத் தக்கபடி துஷ்டபுத்தியுடன் ராஜ்யபாரம் நடத்திவந்தான்.

அயோத்தியாபுரியில் தசரதமகாராஜன் அரசுபுரிந்துவந்த காலத்தில் புத்திரகாமேஷ்டியாகத்தின் பயனுல் ராம, லக்ஷ்மண, பரத, சத்ருக்ன என்ற நான்கு புத்திரர்கள் அவதரித்தார்கள். அவர்களில் ஸ்ரீராமர்தான் மகாவிஷ்ணு அவதாரம். மிதிலையில் ஜநகமகாராஜா தங்க கலப்பைக்கொண்டு யாகபூமியை உழுகையில்



அதில் ஒரு பெட்டி அகப்பட்டது. அதிலிருந்து சீதை (வேதவதி) அகப்பட்டாள். சீதாப்பிராட்டிக்கும் ராமருக்கும் விவாகம் நடந்தது. கொஞ்சகாலம் அயோத்தியில் வசித்துவரும்போது சிறிய தாயாகிய கைகேயினுடைய வார்த்தையின்பொருட்டு காட்டுக்கு சீதையும், லக்ஷ்மணனும் ஸ்ரீராமரும் போனுர்கள். அவ்விடத்தில் பூர்வசாபத்தினுல் ராவணன் சீதையை இலங்கைக்குச்சிறை எடுத்துப்போய்த்தன்னை மணக்கும்படிபலவிதமாக நிர்பந்தம்செய்தான். ஸ்ரீராமர் சீதையைக் காணுமல் நெடுக தேடி கடைசியில் ராவணன் கொண்டுபோயிருக்கும் விஷயத்தை ஜடாயுவால்தெரிந்துகொண்டு, கிஷ்கிந்தை பட்டணத்தில் சுக்கிரீவராஜனைசினேகம்பண்ணிக்கொண்டு, வாலியைவதைத்து, அனுமாருடையசகாயத்தினுல் லங்காபட்டண விஷயம், சீதை இருக்கும் நிலை,வகையறுவை தெரிந்துகொண்டு சமுத்திரத்தில் அணைகட்டி, வானரசேனையுடன் சமுத்திரத்தைத்தாண்டி, ராவணனுடையகுலத்திலுதித்தவர்களில் விபீஷணர்முதலியவர்கள்தவிர எல்லாரையும் ஸம்ஹாரம்செய்து, சீதையை சிறைமீக்ஷிசெய்து, புஷ்பகவிமானத்தில் சீதையுடனும், லக்ஷ்மணருடனும் ராமபிரான் ஆரோகணம்செய்து பாரத்வாஜாச்ரமத்தில் பிக்ஷைகொண்டு, தங்கள் வரவுக்குஎதிர்பார்த்து நந்திகிராமத்தில் ஜடாதாரியாயிருக்கும் பரதனுடன்அயோத்தியாபுரிக்கு வந்து சகல தேசவாசிகளும் ராஜாக்களும்ரிஷிகளும் கூடியிருக்கும் சபாமண்டபத்தில் நல்ல சுபமுகூர்த்தத்தில் வாத்தியகோஷம்செய்ய, நாட்டியப்பெண்கள் ஆட, பிராமணர்கள்வேதகோஷம்செய்ய ஸ்ரீராமபிரானுக்கும்சீதாதேவிக்கும்பட்டாபிஷேக வைபவம் நடந்தது. ஆகையால் கற்புள்ள ஸ்திரீகளுக்கு ஒருநாளும் குறைவில்லை. ஸ்திரீகளுக்கு கற்புத்தான்ஆபரணம். பொன்னுபரணங்களைவிட கற்பாபரணம்தான் பிரகாசமுள்ளது. கற்பாபரணம் ஒன்று இருந்தால் போதும், இதர ஆபரணங்கள்தேவையில்லை. ஆகையால் சகோதரிகளே! தமயந்தியைப்போலவும், வேதவதியைப்போலவும், சீதாப்பிராட்டியைப்போலவும் சுகன்னிகையைப்போலவும், பாஞ்சாலியைப்போலவும் கற்பரசிகளாய்விளங்கி, பாரதமாதாவை கௌரவப்படுத்தி பழயபாரதநாடாக ஆக்கி மேல்நாட்டு நாகரீகத்தினுல் ஏற்பட்டிருக்கும் கெடுதலையும் குறையையும் நிவர்த்திசெய்துவைப்பீர்களென்று நம்புகிறேன். கற்பரசிகள் நீடூழிவாழ்க! இதை வாசிப்போர் வாழ்க !!

கற்பகம்.

# நமது நிலைமையும் கடமையும்.

இங்கு நாமெனப் பொதுவாக வைதிகமதாபிமானிகளையும் சிறப்பாக வைதிகர்களையுங் குறிப்பிடுகிறேன். வைதிக ஸந்ததியில் தோன்றியவர் நிலை, வர வர மிகக்கெட்டு வருகிறது. நாலு புருஷார்த்தங்களுள் அர்த்தகாமங்களுக்கே அதிக ஆதரவு காட்டப்படுகிறது. முனிவர் கூறியவண்ணம் தர்மத்திற்கு விரோதமில்லாமல் அதை ஸேவிப்பதை எவரும் எதிர்க்கமாட்டார். எவ்வகையாலாவது அர்த்தத்தைத் தேடுவதே பரமபுருஷார்த்தமென நம்பப்படுகிறது. உயிர் வாழ்ந்திருப்பதற்குமட்டுமில்லாமல் விவாஹாதிகளில் நேரும் விபரீத செலவுகளுக்கும்,டாம்பீக வாழ்க்கைக்கும் பொருள் தேடவேண்டியிருக்கிறது. எத்துறையிலோ பணம் ஸம்பாதிப்பவன் மேலானவனென கருதப்படுகிறான். சீமை செல்வதும், ரங்கோன் போவதும், பஸ்ரா போவதும், அன்னவிக்கிரயம், ரஸவிக்கிரயம் செய்வதும் மிக ஸஹஜமாகிவிட்டது. வயறு வளர்க்கவெனில்—'ஒருவாறு மதாபிமானமற்றவரேனும் இதை ஒப்புவர். வீணுகக் குலத்தையும், மதத்தையும், குணத்தையும், பணத்தையும், உடலையும் அழித்து, தலையைப்பாழாக்கி, (கிறுப்பு வைத்து) லாகிரிவஸ்துக்களையுபயோகித்து, வர்ஜாவர்ஜமின்றி, கண்டவிடத்தில் கண்டதைப்புஜித்து ஸந்தியை சிராத்தம்முதலிய முக்கிய கர்மாக்களிலும், உபநயம், விவாஹம், முதலிய ஸம்ஸ்காரங்களிலும் வெறுப்புக்கொண்டு, அலக்ஷ்யம் செய்வதை எந்த மதாபிமானிதான் பொருப்பர் ?

பெரும்பாலும் வயதான பெண்களே விவாஹம் செய்யப்படுகின்றனர். விவாஹத்தின் மேன்மையை உணராமல் ஒருநாள் விவாஹம் செய்பவர் சிலர். இதுவே சாஸ்திரீயமெனப் பிரசாரம் செய்கிறாராம் ஒரு சாஸ்திரி ! "விவாஹம் போகார்த்தமே, தனக்கிஷ்டமானதைத் தேடி எடு" எனும் ஸித்தாந்தம் பரவுகிறது. இந்நோய் பெண்பாலரிடம் தோன்றவே வெள்ளைக்காரனை ஓர் ஸ்மார்த்த பிராமணஸ்திரீ மணந்தோடிருந்தது. ஸமீபத்தில் ஸ்ரீவைஷ்ணவ பெண்ணொருத்தி துலுக்கனை மணந்தாள். இப்போது ஓர் ஸ்மார்த்த பிராமணன் சண்டாளஸ்திரீயை கல்யாணம்செய்துகொண்டான். பிரும்மத்வேஷம், உத்தியோகத்தில் அதிகப் பிராமணர் இருக்கின்றனரென முதலில் தோன்றிற்று.



இதார்களைத்தாழ்த்தி நடத்துகின்றனரென இதழ் விட்டது; பணம் பறிக்கின்றனரெனப் பூத்தது; கோவில் கர்ப்பகிருஹத்தில் விடுவதில்லை, மனு நூலில் தங்களை மேன்மைப்படுத்தி எழுதினரெனக் காய்த்தது; சுயமரியாதை எனப் பழுத்தது. இச்சமயத்தில் பிராமணர் தவறு தேடி பெரிதாக்கி பிரசுரிக்கப்படுகிறது. சென்னைபோன்ற நகரங்களில் எங்கும் சிறப்பாக பத்துப்பிராமணரைக்கண்டவிடத்தில் "பாப்பான் பரச்சியைக் கட்டிக்கொண்டது காலணு" என புத்தகவிற்பனை கோஷம் செவிபடுகிறது. எண்ணிறந்த மதாபிமானிகளும் அனுஷ்டாதாக்களுமிருந்தாலும் இவ்வனுசாரம்தான் பரிமளிக்கிறது. என் செய்வோம். முன்னோரது அனுஷ்டானத்தால் கொஞ்சமேனும் தற்காலத்தவர் முகத்தில் பிரும்மக்களை இருந்தது. அதை மிக சிரமப்பட்டு தலைகோரத்தாலும், முகத்தில் விபூதி, சந்தனமிடாததாலும், தலைக்கு வெள்ளைக்காரன் தொப்பி அணிவதாலும், அடியோடு அகற்ற முயல்கின்றனர். முகத்தை மஞ்சளில்லாமல் சோப்பாலும், வெள்ளைப் பவுடராலும், பழாக்கிணுலுங் கூட வைதிகயுடையால் அருகில் வரும் பெண்களை பிராம்மணஸ்திரீ என உணர்ந்து பின்பு புருஷர்களை பிராமணரென அறியவேண்டியிருக்கிறது. வைத்தியத் தொழிலில் ஈடுபட்டவர்மட்டும் சிகாவிஸர்ஜனம் செய்வது முன் வழக்கம் இப்போதோ எவ்வுத்தியோகஸ்தராயினும், உத்தியோகமில்லாவிடினும், இந்த கோரத்தைச் செய்யத் தவறுவதில்லை. அந்தோ ! இது புருஷரோடு நிற்கவேண்டுமேயென அஞ்சினோம் பெண்கள் தலைக்கும் வந்தது கேடு! சுத்தமாக முண்டனம்செய்துகொள்ள வேண்டியவர் செய்துக்கொள்வதில்லை. பதியுடையோர் பாபிங் எனும் ஒருவகை க்ராபுக்கு ஆரம்பித்துவிட்டனர். இப்போக்கு எதுவரை போகுமென எண்ணமுடியவில்லை. புருஷர்களோடு மேடைமீதேறி பேசுவதுபோன்ற ஸமத்வம் கோருவோர் கற்பையும், கணவனையும் வெகு தூரத்தில் விரட்டிவிடுகின்றனர். இனி என்ன நடக்குமோ ஈசா!! நீயே பரம்.

இந்நிலையில் யாமென்னசெய்வதென யோஜிப்போம். பற்பல அவாந்திரபேதங்களிருப்பதாலும் அவரவர் ஸ்வக்ராமத்தைவிட்டு நகரங்களுக்கு ஜீவனார்த்தமாகச்சென்றதாலும், நகரங்களில் அவரவரிஷ்டப்படி நடப்பதை எவரும் தடுக்கமுடியாததாலும், நமது ஸமூஹம் ஓர் கட்டுப்பாட்டிலடங்கவில்லை. ஸத்தியத்திற்கும்

தர்மத்திற்கும் பயந்துநடந்தால்தான் கட்டுப்பாட்டிற்கு அஞ்சுவர். நமது ஜகத்குருவை தர்சிக்கவோ அவருபதேசத்தின்படி நடக்கவோ பரிபாகமுள்ள ஒருசிலரே முன்வருகிறார். ஆதலால் வைதீகரனைவரையும் ஒன்றுசேர்த்தலோ, ஓர் சட்டதிட்டத்திற்கு உடன்படும்படி செய்தலோ, நம்மாலாகாத காரியம். ஸன்மார்க்கத்தை மீறிச்செல்ல பற்பல ஸஹாயங்கள் நிறைந்த இக்காலத்தில் எதிரில் தோன்றி தெய்வங்கட்டளையிட்டால்கூட அதை மீற மனச்சாக்ஷி எனும் காரணத்தைக்காட்டுவர். எல்லை கடந்துபோவாரை எதிர்க்க நம்மாலாகாது. ஆனால் மதப்பற்றுடையோரை ஒன்று சேர்ப்பது ஆகாதகார்யமல்ல. இவர் சேர்ந்து தமது சக்தியை வலுப்படுத்தல் அத்யவச்யம். எவ்வளவு சுத்த ஆஹிதாக்நிக்கும் உற்றார், உறவினர்மூலம் சீமைசென்று ஸந்தியை சிராத்தம்விட்டவர், தலைதவறியவர், ஸம்பந்தம் நெருங்காமலிராது. இதை பலாத்காரமாக நம்மிடத்திலும் பூரவிட பகீரதப்பிரயத்தினம் செய்யப்படுகிறது.

நமது பலத்தை திரட்டுவதோடு அவ்வநாசார வலைக்குள் சிக்காதபடி சிலரையாவது பிரசாரமூலம் தடுக்கலாமென்பதெனது துணிவு. ஸபையின் அவசியத்தை இன்னும் வைதிகஉலகம் உணராமலிருப்பது வருந்தத்தக்கது. கும்பகோணம் பிராமண ஸபை பலருக்கு வழி காட்டுகிறது. கீழூர்ஸபை நல்லவேலை செய்கிறது. ஆங்காங்குள்ளோர் அவ்வூருக்கேற்ற யாதாமொரு வைதிக ஸபையை நிர்மாணித்து மஹோபன்யாஸம், வேதகாவ்யம் கற்பித்தல், புராணமோதல், பஜனைபோன்ற வேலையிலீடுபடலாம். ஒரு சிலருக்கே ஊக்கமிருக்கும். இவரை எல்லாவகையாலும் பலர் பலஹீநப்படுத்துவர் என்பது எனது அநுபவம். ஆயினும் விடா முயற்சியுடன் ஸபை ஸபை என சொல்லி எழுதிவருவதற்கே பயனுண்டாம். எந்தமகாபெரும்ஸபையையும் யான் பார்த்த அளவில்ஊக்கத்துடன் மெம்பரனைவரும் உழைக்கக்காணேம். ஒருவரிருவரோ முன்வருவர், கஷ்ட நஷ்டங்களை ஏற்பர்.

மத்ரப்ராந்தீயபிராம்மணஸபையின் கார்யதர்சி என்ற முறையில் யான் படும் கஷ்டங்கள் செப்பத்திறமல்ல. பலர் அவநம்பிக்கை கொள்கின்றனர். பலர் இது ஏன் வீண்வம்பென்கின்றனர். பலரீசன்செயலை எதிர்க்கவா? என்பர். சிலர் நாம் ஒழுங்காக அநுஷ்டானம்செய்தால் போதுமென்பர். எனக்கு இதில் உத்ஸாஹமில்லை என்பர் சிலர். ஆயினும் எனது கடமையெனக்கருதி காலையில் வேதாந்தபாஷ்யபாடமும், மாலையில் புராணமும், இரவில் வேதகாவ்யபாடமும் சொல்லிக்கொண்டு ஒழிந்தவேளையில் சபை மெம்பர் சேர்க்கும் வேலையில் ஈடுபட்டுக்கொண்டிருக்கிறேன். விவாஹவயதுமசோதாவை எதிர்க்கும் வேலை துரிதமாகச் செய்ய வேண்டும். ஸெப்டம்பரில் அது ஸபைக்கு வருகிறது. ஆதலால் ஆர்யதர்மம் பத்திரிகைநேயர்களனைவரும் ஆங்காங்கு ஓர் சபை கூட்டி நமக்கு நாமேயாவது மதப்பிரசாரம் செய்துகொண்டு ஷை சட்டங்களைக் கண்டித்து பத்திரிகைகளுக்கு ப்ரசுரமனுப்ப வேண்டுகிறேன். அதற்கும் கொஞ்சம பயனுண்டோ இல்லையோ உடனே செய்யவேண்டியது. ஷை சட்டகண்டன மாகும் பயனை அளிப்பது பரமனது செயல்.

ஸ்ரீவத்ஸ. வெ. ஸோமதேவசர்மா,
மத்ரப்ராந்தீயபிராமணஸபை காரியதரிசி.

---



பிருஹதீச்சுவரமாஹாத்மியம் என்னும்

## சோழமன்னர்களின் சரித்திரம்.

(378-வது பக்கத்தொடர்ச்சி.)

### அத்தியாயம், 4

ஸூதர்:— சிவகணங்களெல்லாம் மஹாதேவனுடைய அடிமலர்களில் பக்தி பாராட்டுகின்ற அரசர்களாக பூமியில் பிறந்தார்கள். நீதியையே பொருளாகக்கொண்டவர்களும், விபூதி ருத்திராக்ஷமணிந்தவர்களும், சிவபக்தர்களை அர்ச்சிப்பதில் விருப்பமுடையவர்களும், தங்கள் மக்களுடனும் சிவலிங்கத்தை ஆதரவுடன் அர்ச்சிப்பவர்களும், அந்தணர்களை யர்ச்சிப்பதில் விருப்புடையவர்களும், ஸ்நாந தானங்களில் அதிகப்பற்றுடையவர்களுமான அவ்வரசர்கள் இச்சோழநாட்டில் பல சிவாலயங்களையும்

கட்டுவித்தனர். தானாகத்தோன்றிய க்ஷேத்திரங்களில் விண்டு விரிந்தவிடங்களைப் பழுதுபார்த்துக்கொண்டும், தங்கள் விருப்பப்படி அனேகவாலயங்களையும், பிராகாரங்களையும், கோபுரங்களையும், அநேகம் தீர்த்தங்களையும், பல படிக்கட்டுக்களையும் இச்சோழமன்னர்கள் கட்டுவித்தனர்.

சோழ மன்னர்களாயுதித்தவச்சிவகணங்கள் அவ்வீசனுணையின்படி அந்தணர்களுறைவிடமாகிய அக்கிரஹாரங்கள், மடங்கள், மார்க்கவிருக்ஷங்கள், ஆற்றின்படிக்கட்டுகள், புஷ்யமண்டபங்கள், மஹாமண்டபங்களாகிய இவைகளை நிர்மாணஞ்செய்தனர்.

தங்கள் பாரக்கிரமத்தால் சேர்க்கப்பட்ட தான்யங்களையும் பொருள்களையுஞ் சிவாலயங்களைக் கட்டுவிப்பதிலேயே செலவிட்டு வந்தனர். தங்கள் வருமானத்தில் நாலிலொருபங்கைக்கொண்டே ஸைன்யங்களையும், வேலைக்காரர்களையும் போஷித்தனர்.

करन्ते जगृहुर्भूपाः गुडाश्मक सुधेष्टकम् ।

அவ்வர்சர்கள் வெல்லம், கல், சுண்ணாம்பு முதலியவைகளைக் கப்பமாகப் பெற்றார்கள். அச் சோழ மன்னர்கள் — குடிகளைக்காப்பாற்றுகிறவர்களும், பாபிகளைச் சிக்ஷிப்பவர்களும், நீதியையறிந்தவர்களும், அறத்தையனுஷ்டிப்பவர்களும், காமங் கோபம் மதம் நீக்கியவர்களும், தயை தாக்ஷிண்யம் நிறைந்தவர்களும், எளியோர், நாதியில்லாதோர், கண்ணிழந்தோர் முதலியோர்களைக் காப்பவர்களும், சோடசமஹாதானங்களைப் பதினறுதடவைகள் கொடுத்தவர்களும், மறையோர்களுக்கு அக்கிரஹாரங்கள், தனம் தான்யம் முதலியவைகளைக்கொடுத்தவர்களும், அன்னசத்திரங்கள், மடங்கள், புஷ்பத்தோட்டங்கள், வழிப்போக்கர்கள் தங்கும் மண்டபங்கள், குளங்கள், தடாகங்கள், அவைகட்குப் படிக்கட்டுகள், கிணர்கள் முதலியவைகளைச் செய்வித்தவர்களும், கோடைகாலங்களில் நீர்மோர்ப் பானகங்களளிக்கும் சாலைகள் வைத்துச் சந்தனம், தாம்பூலம், விசிறி, புஷ்பம், குடைகளைக்கொடுப்பவர்களும், குளிர்காலங்களில் தங்குமிடங்களையளிப்போரும், ஹேமந்தந்தத்தில் அன்னமளிப்பவர்களுமாக விளங்கிவந்தனர்.

இரவில் வண்டியிலன்னமேற்றிச் சென்று அநாதர்களான எளியவர்களுக்கமுதிட்டுவந்த அவ்வாசர்களுதிக்கவே சோழநாட்டில் தான்யங்கள் நிறைந்தன. வழிகளிற் கொள்ளைக்காரர்கள்



ஒழிந்தனர். அவ்வேந்தர்கள் சேனபலத்தினல் மிக்கக்குறைவுபட்டிருப்பினுஞ் சிவபக்தியாலேயே ஜயமடைந்து கங்கை முதல் ஸேது வரையிலாண்டனுபவித்தனர். இவ்வாறு கல்பாதியில் அவ்வாசர்கள் சிவகைங்கர்யத்தில் முயற்சியோடு ஆயிரம் வருஷங்கள் இச்சோழதேசத்தையாண்டுவந்தனர். அவர்கள் சரித்திரத்தைத் தனித்தனியே கூறுகிறேன். கேட்போரின் பாவத்தைப்போக்குமிதனைக்கேட்பாயாக.

## அத்யாயம் 5.

முனிவர்கள்:— 'எவ்வாறு பதினறு சோழமன்னர்கள் இப்புவியிலுதித்தனர்? எந்தெந்தவிடங்களிற் சிவகைங்கர்யங்களைச் செய்தார்களோவத்தலங்களின் பெயர்கள் யாவையென கூறுவீராக. சிவபக்தர்களாகிய மன்னர்களின் சரிதத்தைச் சொல்வோரும் கேட்போரும் சிவலோகத்தையடைவர்களாதலால், அதனைக் கூறுங்கள்.

நைமிசாரண்யவாஸிகளான முனிவர்களின் மொழிகளைக் கேட்டு அவர்களை வணங்கி கைகூப்பிக்கொண்டு ஸூதமுனிவர் சோழசரித்ரத்தைச் சொல்லத்தொடங்கினர்.

ஸூதர்:—நைமிசாரண்ய வாஸிகளான முனிவர்களேகேளுங்கள். சிவகைங்கரியங்களையே செய்பவர்களும் பஸ்ப ருத்ராக்ஷதாரிகளுமான சோழ மன்னர்களின் சரித்திரங்களைக்கேளுங்கள்.

முன்பு சூரிய வம்சத்தில் குலோத்துங்கன் என்னுமோர் அரசன் உதித்தான். அவன் கர்வடம் என்னுமூரில் பயிர்த்தொழில் செய்யுமொருவனக விருந்தான். அவனுக்குக் கோமளா என்னுமோர்மனைவியிருந்தாள். அழகிற்சிறந்தவம்மாது தன்கணவனிடத்தில் மிக்கவன்புடையவளாகவும், கணவனுக்குப்பணிவிடை செய்வதில் விருப்புடையவளாகவும், கணவன் சொல்தவறுதவளாகவும், வணக்கம், நடத்தை, சொல், ஈகை, முதலிய இக்குணங்களால் சிறப்புற்றவளாகவுமிருந்துக்கொண்டு அதிதிகளுக்கன்னமிட்டுவந்தாள்.

இவ்வாறு வெகுநாட்கள்கழியவே, இத்தம்பதிகள் சிவனடியார்களை வழிபடுவதிலும் சிவலிங்கங்களைத் தர்சிப்பதிலும் மிக்க விருப்பமுடையவர்களாகவிருக்கையில், ஓர் நாளிரவு ஸாக்ஷாத் சங்கரர், காஷாயக்கந்தையொன்றையுடுத்துக்கொண்டும் விபூதி

ருத்திராக்ஷங்களணிந்துக்கொண்டும் ஓர் சிவபக்தன் போன்றவுருவுடன் குலோத்துங்கனின் வீட்டையடைந்தார். விபூதி ருத்திராக்ஷாபரணராய் வந்த அப்பக்தரைக் கண்ணுற்ற குலோத்துங்கனும் தன்மனைவியுடனவரை வணங்கிக் கூறலானான்:—

குலோத்துங்கன்:— "ஏ பக்தரே! வாரும், அனுக்கிரஹம் செய்யவேணும். என்மனையிலுண்ணவேண்டும், உம்மைப்பூஜித்தால் என் ஜன்மம் ஸபலமாகும்.

शिवस्य शिवभक्तस्य नान्तरं विद्यते प्रभो ।
तवार्चनात् शिवस्तुष्टो भविष्यति न संशयः ॥

"சிவனுக்கும் சிவனடியார்களுக்கும் பேதமில்லை, உம்மைப்பூசித்தாலே சிவன் சந்தோஷிப்பாரென்பதற்கையமில்லை"

என்றிவ்வாறுசொல்லி அவரிருபாதங்களையும் சுத்திசெய்து, பீடத்திலமரச்செய்து, அவர் சரீரத்தில் சுகந்தம்பூசி நறுமலர்களாலர்ச்சித்தான். பின்பு அறுசுவையுடனமுதளித்து, கை கழுவச்செய்து, தாம்பூலங்கொடுத்து, படுக்கையிலிருத்திக் கால்களைப்பிடித்தனர்.

அவர்களுடைய பக்தியைப்பார்த்தப் பரமசிவன் உரைப்பதாவது:—

ஈசன்:— "இவ்விரவில் உங்களிருவராலும் பக்தியுடன் பூஜிக்கப்பட்டேன். உன்னதிர்ஷ்டவசத்தாலுன்னிடமெனக்களவற்ற பிரீதியுண்டாயிருக்கிறது. இச் சோழதேசத்திற்கரசனாகவிருக்கும்படி உனக்கிப்பொழுதே பட்டம் கட்டிவிட்டேன். உன் முதல் பதினாறு சந்ததிகளுக்கு, இவ்விராச்சியத்தைக் கொடுத்தேன். உன்வம்சத்திலுதிப்பவர்களெல்லோரும் எனக்குக் கைங்கர்யங்கள் செய்துகொண்டு எப்பொழுதும் என்னிடம் பக்திவாய்ந்த அரசர்களாகவிருப்பார்கள்.

இவ்வாறுரைத்துக் குபேரனை நினைக்கவே உடனே அங்கு குபேரன் தோன்றிச் சிவனை வணங்கி அவ்வீட்டில் தானென் செய்யவேண்டுமென்று வினவினன்.

(இன்னும் வரும்.)

பண்டிட், N. வைத்தினாதசாஸ்திரி,
ஸரஸ்வதிமஹால், தஞ்சை.

